10th February 1959]

SRI A. VEDARATHNAM : இந்நாட்டிலுள்ள பத்திரிகைகளில் வருகிற செய்திகளை எல்லாம் உண்மையென்று நம்புகிற பழக்கம் ஜனங்களிடத்திலே இருக்கிறது. அந்நிலையில் அநேகம் பத்திரிகைகள் உண்மைக்கு மாறான செய்திகளை பிரசுரிக்கின்றன. சட்ட சபையில் நடந்த விஷயங்களைக்கூட நடந்ததற்கு மாறாக பிரசுரம் செய்ததின் மேல், அதிகாரம் இருந்ததால் அதன் மேல் நடவடிக்கைகள் எடுக்க முடிந்தது. அதேபோன்று வெளியிலுள்ள காரியங்களை உண்மைக்கு மாறான விதத்தில் பிரசுரித்தால் வரப்போகிற சட்டத்தில் அவைகளின் பேரில் நடவடிக்கைகள் எடுக்க அரசாங்கம் வகை செய்யுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : உண்மைக்கு மாறுபட்ட செய்திகள் எல்லாவற்றின் மீதும் நடவடிக்கைகள் எடுப்பது என்பது முடியாத காரியம். ஆபாச பிரசுரங்கள், மக்களின் ஒழுக்கத்தைக் கெடுக்கும் பிரசுரங்களைத் தடுப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்க இப்பொழுது சட்டம் திருத்தப்படுகிறது. உண்மைக்கு மாறாக இருந்தால் அந்த உண்மை வெளிப்பட்டு விடும். மக்கள் உணர்ந்து கொள்வார்கள். எந்தெந்த பத்திரிகைகள் உண்மையான செய்திகளைப் பரப்புகின்றன ? எந்த பத்திரிகைகள் பொய் செய்திகளை பரப்புகின்றன என்று மக்களுக்கு இப்பொழுது தெரிந்திருக்கிறது என்று நம்புகிறேன்.

SRI V. K. KRISHNAMURTHY : தலைவர் அவர்களே, கூடா ஒழுக்கத்தை அடிப்படையாகக்கொண்டு, கூடா ஒழுக்கத்தை கைக்கொண்டிருக்கும் நூல்கள் அத்தனையும் தடை செய்வதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : "அப்ஜெக்ஷனபில் மாட்டர்" என்று சொல்லும்பொழுது புத்தகங்களும் வரும், பத்திரிகைகளும் வரும், சுவர் ஒட்டிகளும் வரும், படங்களும் வரும். எல்லாமே அதற்குள்ளாக வரும்.

*Report of the Agricultural Administration Committee*

* 174 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether the Agricultural Administration Committee's (Nalagarh Committee) report was examined by this Government;

(b) if so, what are the recommendations that are to be implemented by this Government; and

(c) what are the recommendations that are not possible to be implemented and why?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) The recommendations contained in the Report of the Committee are under examination of the Government.

(b) & (c) Since the recommendations are still under examination it will not be possible to give the details, till the final decisions are taken.

SRI K. SATTANATHA KARAYALAR : இதிலே முடிவு எடுப்பதற்கு இன்னும் எத்தனை காலம் ஆகும் என்பதைச் சொல்லமுடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒவ்வொன்றாக முடிவு செய்யப்பட்டு வருகிறது.